# அன்பும் வாழ்க்கையும்

அருளியது :

ஸ்ரீ சுவாமி சிவானந்தா

தமிழாக்கம் :

திரு. K. இராஜசேகரன், M. A., B. T.




வெளியிடுவோர் :

## தெய்வீக வாழ்க்கைச் சங்கம்

சிவானந்தா ஆஸ்ரமம்

சுவாமி சிவானந்தா சாலை

இராசிபுரம் :: சேலம் மாவட்டம்.

விலை ] 1990 [ ரூ. 3—00

3 "முத்தமிழ்ப்பண்ணை"
வைரி செட்டிப்பாளையம்-621012.
திருச்சி மாவட்டம்.

# அன்பு

அன்பே வாழ்க்கையின் சட்டம். பிறரிடம் அன்பு பாராட்டுவது என்பது சட்டத்தை நிறைவேற்றுவதாகும். சட்டத்தை நிறைவேற்றுவது என்ருல் நிலையான அமைதியும் எப்போதும் நிலைத்திருக்கும் இன்பமும் நீடித்திருக்கச் செய்வது என்பது பொருள்.

இவ்வுலகம் அன்பிலிருந்து தோன்றியதாகும். இது அன்பில் தோன்றி வாழ்ந்து, முடிவில் அன்பில் கலக்கிறது. அன்பு அண்டத்தின் இயக்கு விசையாகும்.

அன்பே வாழ்க்கை. அன்புதான் இன்பம். அன்புதான் இதயம். அன்பு உள்ளங்களையும், ஆன்மாக்களையும் பிணைக்கும் நேர்த்தியான முடிச்சு.

அன்பு ஆக்கபூர்வமானது. படைப்பாற்றல் மிக்கது. பிறரைக் கட்டுப்படுத்துவது. பிறரிடம் அன்பை உருவாக்குவது. இது மறுபிறப்பின் தத்துவம். அன்பு நீங்கள் நம்பிக்கையுடன் பயன்படுத்தும் உண்மையான பொருள். இது சந்தேகத்துக்கிடமற்றதும் மெய்யானதுமாகும். அன்பினது விதியை அறிவுபூர்வமாகத் துல்லியமாகப் பயன்படுத்துபவர்களால் அதிசயங்களை நிகழ்த்திக் காட்ட முடியும். தற்கால அறிவியலைக் காட்டிலும் அன்பின் விதி மிகப்பெரிய அறிவியலாகும். அடியார்களிடத்தும், நல்லவரிடத்தும் அன்பு மேலோங்கியிருக்கிறது.

நேசிப்பதற்காகத்தான் வாழ்கிறோம். வாழ்வதற்காகத்தான் நேசிக்கிறோம். நேசிக்கக் கற்றுக்கொள்ளவே வாழ்கிறோம். முக்திநிலையில் வாழக் கற்பதற்காக நேசிக்கின்றோம். நம்பிக்கையும், அன்பும், பக்தியுமில்லாத வாழ்க்கை பயனற்றது. வீணானது. அது உண்மையில் இறப்பேயாகும்.

அன்பைக் காட்டிலும் மேலான ஒழுக்கமில்லை. அன்பைக் காட்டிலும். உயர்ந்த அறிவு இல்லை, தர்மமில்லை. அன்பைவிட உயர்வான சமயமில்லை. ஏனெனில் அன்பே உண்மை, அன்பே கடவுள். அன்பின் திரண்ட உருவமே கடவுள். அவரது ஒவ்வொரு படைப்பிலும் அவரது அன்பை நிச்சயமாக நீங்கள் காண முடியும்.

உண்மை அல்லது கடவுளின் சாம்ராஜ்ஜியத்துக்குச் செல்ல நேர்வழி அன்பே. இது படைப்பின் உயிர்க்கொள்கை. ஆன்ம சக்தியின் உயர்ந்த விளக்கம். எல்லா மதங்களினுடையவும் ஒருமித்த கடமை. அடியார்கள் உலகை வெல்வதற்காகத் தம் கையில் வைத்திருக்கும் மந்திரக்கோல். மீரா, துக்காராம், துளசிதாசர், கௌரங்கர், ஏசுபிரான் ஆகியவர்களையும், கடவுளிடத்துத் தீவிர பக்தி கொண்டிருந்த சாதுக்கள், மன்சூர்கள், சந்நியாசிகள், தபசிகள் ஆகியவர்களையும் பக்தி நெறியில் பின்னிருந்து உந்திச் செலுத்திய சக்தி அன்புதான்.

## பாசமும் தூய்மையான அன்பும்

உடம்பின்மேல் அல்லது சரீரத்தின்மேல் செலுத்தும் அன்பு பாசம். கடவுளிடத்துச் செலுத்தும் அன்பு, பிரேமை அல்லது பக்தி. இது தூய்மையானது. அன்பைப் பெறுவதற்காகச் செலுத்தப்படுவது அன்பு.

சுய இலாபத்துக்காக ஒருவரிடம் அன்பு காட்டுவது சுயநலமான அன்பு. இவ்வுலகுடன் உங்களை அது பிணைத்துவிடும். அனைத்துயிர்களும் இறைவனது வெளித்தோற்றமே என்று பக்தியுடன் அவற்றை நேசிப்பதே உண்மையான அன்பாகும். அது தெய்வீகமானது. பிறவி விடுதலைக்கு இட்டுச் செல்கிறது.

ஒரு கணவன் தன் மனைவியை மனைவி என்பதற்காக நேசிப்பதில்லை. தன் சுயநலத்துக்காகவே நேசிக்கின்றான். அவன் தன்னலம் உடையவனாக இருக்கின்றான். சிற்றின்பத்தை அவளிடம் எதிர்பார்க்கிறான். அவளுக்குத் தொழு நோய் அல்லது வைசூரி வந்து அவளது அழகு சிதைந்து விட்டால் அவனுடைய அன்பும் மறைந்துவிடும்.

இப்படிப்பட்ட அன்பில் உடம்பின்மேல் ஆசை இருப்பதும், தீவிரமான சுயநலமிருப்பதும் தெரிகிறது. இது கூலிக்காகச் செலுத்தும் அன்பாகும்.

கூலிக்குச் செலுத்தும் அன்பில் நேசிப்பவர், நேசிக்கப்படுபவர் ஆகிய இருவருக்கிடையே உண்மையான நேசம் இருக்கமுடியாது. கணவன் சாகக்கிடக்கும்போது, மனைவி வங்கிக்கணக்குப்

புத்தகத்தை எடுத்துக்கொண்டு தாய்வீட்டுக்குச் சென்று விடுகிறுள். சில நாட்கள் கணவன் வேலே இழந்துவிட்டால் மனேவி அவனிடம் முகஞ்சுளித்துக் கடுமையாகப் பேசுகிறுள். அவனுக்கு அன்போடு பணிவிடை செய்வதில்லே. இது சுயநலம் மிக்க அன்பு. உள்ளத்திலிருந்து வெளிப்படும் உண்மை யான பாசம் அங்கு இல்லே. தியாகத்துக்கான பொருளுமில்லே. ஆகவே எப்போதும் சச்சரவும், சண்டையும், அமைதியற்ற நிலேயும்தான் வீட்டில் நிலவும். கணவனும், மனேவியும் உண்மையாகப் பிணேக்கப்படவில்லே. எப்போதும் இழுபறிதான். எப்படியோ துயரத்துடனும், மகிழ்ச்சியின்றியும் வாழ்க்கையை நடத்திச் செல்கிறுர்கள்.

இகழ்ச்சிக்குரிய நமது சகோதரிகள்கூட, பணம் கறக்கும் வரையில் வாடிக்கையாளரிடம் சிலகாலம் மிகுந்த அன்பையும், மோகனப் புன்னகையையும் காட்டுகிறுர்கள். தேனெழுகப் பேசுகிறுர்கள். இதை உண்மையான அன்பு என்ருே, உண்மையான மகிழ்ச்சி என்ருே உங்களால் சொல்லமுடியுமா? மனந்திறந்து சொல்லுங்கள். இவற்றைத் தந்திரம், சூழ்ச்சி, குறுகிய மனப்பான்மை, போலி நடிப்பு என்றுதான் சொல்லவேண்டும்.

இப்பூவுலகில் காணும் அன்பில் சுயநலமும், முரண்பாடும், சந்தேகமும், குறைபாடும் உள்ளன. ஆனுல் தூய்மையான அன்பு உயர்ந்தது, ஆழம் மிக்கது, நிறைவானது, குறையற்றது. அது நிலேயானதும், மாருததும், முடிவற்றதும் ஆகும்.

சுயநலமான பந்தம் பிறரிடமிருந்து கைம்மாறு எதிர்பார்க்கிறது. ஆனுல் தூய்மையான, தெய்வீக அன்பு நேசிக்கப்படுபவருக்கு மகிழ்ச்சிதந்து அவர் பெறும் மகிழ்ச்சி காரணமாக நேசிப்பவருக்கும்

மகிழ்ச்சியைத் தருகிறது. அன்பு தியாகமாகும். அன்பு செலுத்துவது அதனைப் பகிர்ந்து கொள்வதற்கும், சேவை செய்வதற்கும்தான்.

## சேவையே அன்பு — ஒரு விளக்கம்

சேவை, கொடை, பெருந்தன்மை, இரக்கம் ஆகியவற்றின் மூலம் அன்பு பரவுகிறது.

தயை தீவிரமான அறமாகும். இது அன்பின் உடன்பாட்டு விளக்கம். அகிம்சை என்பது அன்பின் எதிர்மறை விளக்கம்.

சாத்வீகப் பண்பு மட்டும் போதுமானதாகாது. செயல்திறம் மிக்க பண்பு அல்லது நிகரான ஒத்த அன்பு ஒருவரது ஆன்மீக வளர்ச்சிக்கு மிக இன்றியமையாதது. அடியார்கள் எப்போதும் செயலாற்றிக்கொண்டே இருத்தல் வேண்டும்.

சேவை செய்ய வேண்டுமென்ற ஆர்வம் உங்களிடம் ஆழப்பதிந்திருக்க வேண்டும். சேவை உணர்வு உங்களிடம் இயல்பாக இருத்தல் வேண்டும். வெறும் ஆரவாரம் கூடாது. அன்பும், பற்றும், உண்மையும், ஈடுபாடும் இல்லையானால் எல்லாத் தொண்டும் வீணே. ஈடுபாட்டுடனும், அன்புடனும் தொண்டாற்றினால் கடவுள் உங்கள் பக்கத்திலேயே இருப்பார்.

சங்கரர், ஏசுபிரான், புத்தர் பெருமான், முகமது நபி ஆகியவர்கள் சேவை செய்தனர். ஜனகரும், சமர்த்த இராமதாசரும் தொண்டாற்றினர். தொண்டு செய். அன்பு காட்டு. தர்மம் செய். இவற்றைப் பின்பற்றுபவர்கள் இறைவனது பேரருளால் துன்ப காலங்களிலும் கஷ்ட நாட்களிலும் நலமாக வாழ இயலும்.

நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கக் கடினமாக உழைப்பது போலவே மற்றவர்களும் உண்மையான மகிழ்ச்சியடையச் செய்யுங்கள். ஆ த ர வ ா க ப் பேசுங்கள். மகிழ்ச்சியோடு புன்னகையைக் காட்டுங் கள். அன்பான செயலைச் செய்யுங்கள். சிறிது தொண்டு செய்யுங்கள். துன்பப்படுபவர் கண்ணீ ரைத் துடையுங்கள். இன்னொருவருடைய கரடு முரடான வாழ்க்கைப் பாதையைச் சீராக்க உதவுங்கள். பேரின்பத்தை உணர்வீர்கள்.

## உலகாயத அன்பு அல்லது விஸ்வ பிரேமை

ஏ ழை க ளை யு ம், நசுக்கப்பட்டவர்களையும், ஒடுக்கப்பட்டவர்களையும் வணங்குங்கள். அவர்கள் தான் உமது கடவுள்கள் – முழுமுதற்கடவுள்கள்.

எல்லோரிடத்தும் அன்பு செலுத்துங்கள். பத்து இலட்சம் யாகங்கள் அல்லது தியாகங்கள், கடுமை யான துறவு, விரதங்கள் ஆகியவற்றால் பெறும் பலனைக் காட்டிலும் இதில் அதிக பலன் பெறலாம். அ ண் ை ட வீட்டுக்காரரின் மகிழ்ச்சியை உங்க ளுடைய மகிழ்ச்சியாகவும், அவருடைய துன்பத்தை உங்களது துன்பமாகவும் கருதுங்கள்.

மனிதன் ஒருவனே. கடவுள் ஒருவரே. அன்பும் ஒன்றே, சட்டமும் ஒன்றே. இறைவனை உணர்தலும் ஒன்றே. நாம் அனைவரும் ஒரு மரத்தின் பழங்கள். ஒரு கிளையின் இலைகள். இவ்வுலகில் வெளியாரும், அயலாரும் இல்லை. பரிணாம வளர்ச்சியில் ஒவ்வொரு வரும் கடவுளே.

உயிருடைய ஒ வ் வெ ா ரு பொருளுடனும் உங்களை இணைத்துக் கொள்ளுங்கள். நண்பனுடனும் பகைவனுடனும் அமைதியாக வாழுங்கள்.

எல்லா மனிதரும் ஒருடலின் உறுப்புகளே. எல்லாப்படைப்பும் கடவுளின் குடும்பமே. கடவுளுடைய படைப்பு அனைத்தையும் நேசியுங்கள். இலைகளையும், விலங்குகளையும், பறவைகளையும், செடிகளையும்கூட நேசியுங்கள். ஒவ்வொரு பொருளையும் நேசியுங்கள். இதுதான் அவற்றின் மூலாதார இரகசியத்தை அறியும் வழி.

நான் அன்பாகிய மதத்தைப் பின்பற்றுகிறேன். நான் ஓர் உண்மையான கிறித்தவன், முஸ்லீம், இந்து, புத்தசமயவாதி, சீக்கியன், பார்சி.

உண்மையான மதம் சடங்குகளின் பழக்க வழக்கங்களான நீராடுதல், புனித யாத்திரை ஆகியவற்றைக் கொண்டதல்ல. அனைவரையும் நேசிப்பதுதான் உண்மையான மதம். உலகாயத அன்பானது எல்லோரையும் விரும்பி வரவேற்றுக் கொள்வது. எல்லோரையும் உள்ளடக்கிக் கொள்வது. தூய்மையான அன்பில், அதன் இதமான அணைப்பிலிருந்து எவரும் வெளியேற்றப் பட மாட்டார்கள். இப்புவியில் வாழும் சிறிய எறும்பிலிருந்து வலிமைமிக்க யானை வரை, ஒதுக்கப்பட்ட குற்றவாளி முதல் அதிகாரம் மிகுந்த மன்னர் வரை, மோசமான போக்கிரி முதல் மரியாதைக்குரிய அடியார் வரை அனைவரையும், நம்மில் மிக எளியவரையும் ஏற்கத்தக்க அளவு அன்பு விசாலமானது. மனிதனை மனிதனிடமிருந்தும், ஒரு நாட்டை இன்னொரு நாட்டிலிருந்தும் பிரிப்பது பகைமைதான். செருக்கும், தானெனும் அகந்தையும் ஒரு மனிதனை இன்னொருவனிடமிருந்து பிரிக்கின்றன. வெறுப்பு, கர்வம், தன்முனைப்பு ஆகியவை மனத்தின் படைப்புக்கள். அவை அறியாமையின் உற்பத்தி. இவை தூய்மையான அன்பின்முன் நிற்க இயலாது.

# தற்போதைய தேவை

வெறுப்பு வெறுப்பைப் பிறப்பிக்கின்றது. அன்பு அன்பை ஈன்றெடுக்கிறது. அச்சம் அச்சத்தைத் தோற்றுவிக்கிறது. இது மாற்ற முடியாத உளவியற் சட்டம். வெறுப்பு, தீமை ஆகிய எல்லாச் சக்திகளையும் வென்று, இறைவனது சக்தியான, இயல்பாயமைந்த அன்பு புவியில் எங்கும் மேலோங்கியிருத்தல் வேண்டும்.

அனைத்து உயிர்களுடையவும் முக்தி நிலை அன்பில்தான் இருக்கிறது. இருள் சூழ்ந்த, தனித்த இவ்வுலகின் நம்பிக்கை அன்பேயாகும். கருணையும், ஒருமைப்பாடும், அன்பும், தியாகமும், பரிவும், சகிப்புத் தன்மையும் கொண்ட தலைவர்கள் இவ்வுலகுக்குத் தேவை. உலகுசார்ந்த அன்பை வளர்த்துக் கொள்வதில்தான் தனிப்பட்டவரின் ஆன்மீக வளர்ச்சியும், சமுதாய நலமும், உலகமனைத்துக்குமான அமைதியும் உள்ளன. ஆகவே செயலில் ஈடுபட்டு உலக முழுவதிலும் அன்பாகிய திருமறையைப் பரப்புங்கள்.

ஒவ்வொருவருக்கும், ஒவ்வொரு வீட்டுக்கும் சென்று பார்வையிடுங்கள். கீர்த்தனைகள் பாடுங்கள். கூட்டுவழிபாடு நடத்துங்கள். ஒற்றுமை, நல்லெண்ணம், தொண்டு, தியாகம், ஒருமைப்பாடு, பரிவு ஆகியவற்றின் பெருமையைப் பரப்புங்கள். ஒற்றுமையின் தெய்வீகச் செய்தியும், ஒற்றுமைக்கான பேரறிவாளரது அழைப்பும், நல்லிணக்கமான கூட்டுறவும், எல்லோரது உள்ளங்களையும் அடைந்து அன்பையும், சகோதரத்துவத்தையும் மனித இனத்தின் இதயத்தில் விழிப்பூட்டட்டும். அன்பு இதயம் கொண்ட நல்லவர்களால் உலகம் முழுதும் பிணைக்கப்படட்டும்.

## வாழ்க்கையின் நோக்கம் அன்பே

மெய்யடியார்களும், தொண்டர்களும், தீர்க்கதரிசிகளும் அன்புதான் வாழ்க்கையின் இறுதி நோக்கம் என்று எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். கிருஷ்ணபரமாத்மாவின் இராசலீலை அன்பும், தெய்வீக இரகசியங்களும் நிறைந்தது. கோபியரின் ஆடைகளைப் பறித்ததற்கு, தன்முனைப்பை அழிப்பது என்பது பொருளாகும். கிருஷ்ண பகவான் தமது புல்லாங்குழலின் இசையால் அன்பைப் பரப்பினார். புத்தபகவான் அன்புப் பெருங்கடலாய்த் திகழ்ந்தார். புலிக்குட்டியின் பசியைத்தணிக்கத் தமது உடலைத் தந்தார். பருந்தின் பசியைப் போக்கத் தம் தொடையில் அமர்ந்த புறாவின் எடைக்கு எடை தம் தொடை சதையைச் சிபி என்னும் மன்னர் அளித்தார். எப்படிப்பட்ட புனிதமான ஆன்மா! இராமபிரான் அன்பு நிறைந்த வாழ்க்கையை நடத்திக் காட்டினார். தனது ஒவ்வொரு செயலிலும் அன்பைக் காட்டினார். அன்பின் குழந்தைகளே! அவர்களது அறிவுரை களிலிருந்து உணர்வு பெறுவீர்களாக. அன்புப் பாதையில் செல்லுங்கள். கடவுளுடன் தொடர்பு கொள்ளுங்கள். நிலையான அன்பாகிய அரசை அடையுங்கள். இது உங்களது பெரிய கடமை யாகும். வாழ்க்கையின் ஒரே இலட்சியமான அன்பைப் பெறுவதற்கென்றே இந்த உடம்பைப் பெற்றுள்ளீர்கள்.

அன்போடு வாழுங்கள். அன்போடு சுவாசி யுங்கள். அன்போடு பாடுங்கள். அன்போடு உண்ணுங்கள். அன்போடு அருந்துங்கள். அன்பாகப் பேசுங்கள். அன்பாக வழிபாடு செய்யுங்கள். அன்புடன் தியானம் செய்யுங்கள். அன்போடு எண்ணுங்கள். அன்போடு பழகுங்கள். அன்போடு

மரணத்தை எதிர்கொள்ளுங்கள். உங்களது எண்ணம், சொல், செயல் ஆகியவற்றை அன்பாகிய நெருப்பில் புடம்போட்டுத் தூய்மைப்படுத்துங்கள். அன்பாகிய பெருங்கடலில் மூழ்கி நீராடுங்கள். அன்புத் தேனை உண்டு அன்பு உருவமாகவே மாற்றம் பெறுங்கள்.

இவ்வுடம்பு இறைவனின் நடமாடுங் கோவில் என்பதையும், எல்லா உயிர்களும் கடவுளின் சாயல் என்பதையும், இவ்வுலகம் கடவுளின் இருப்பிடம் என்பதையும், கடவுளது செயல்தான் எல்லாக் கரங்களின் வழியாக உழைக்கிறது, எல்லாக் கண் களின் வழியாகப் பார்க்கிறது. எல்லாக் காதுகளின் வழியாய்க் கேட்கிறது என்பதையும் உணர்வீர் களானல், நீங்கள் வித்தியாசமான மனிதனுக மாறுவீர்கள். மிக மேலான அமைதியையும், பேரின்பத்தையும் பெறுவீர்கள்.

# வாழ்க்கை

உண்மையாகச் சொல்ல வேண்டுமானால் இறைவன்தான் வாழ்க்கை. வாழ்க்கை இன்பமானது. பேரின்பப் பெருவெள்ளமே மெய்ப்பொருளின் வாழ்க்கை.

வாழ்க்கை ஓர் உணர்வுமிக்க நீரோடை. ஒவ்வோரணுவிலும் உள்ள உணர்வலையே வாழ்க்கை. ஒவ்வொரு பொருளுக்கும் உயிருண்டு. ஒரு சிறிய கல்லுக்குக்கூட உயிர் இருக்கிறது. பருப்பொருள் உயிருடன் தொடர்புடையது. இது தற்கால அறிவியல் வல்லுநர்களால் உறுதி செய்யப்பட்டுள்ளது.

வாழ்க்கை என்பது எப்போதும் மாறிக்கொண்டிருக்கின்ற காட்சிகளைக் கொண்ட, முடிவில்லாத காலமாகிய பெருங்கடலின்மீது மேற்கொள்ளும் பயணமாகும். இது அசுத்தத்திலிருந்து தூய்மைக்கும், வெறுப்பிலிருந்து தூய அன்புக்கும், இறப்பிலிருந்து அழியா நிலைக்கும், குறைபாட்டிலிருந்து நிறைவுக்கும், அடிமைத்தனத்திலிருந்து சுதந்திரத்துக்கும், வேற்றுமையிலிருந்து ஒற்றுமைக்கும், அறியாமையிலிருந்து நிலைத்த அறிவுக்கும், துயரங்களிலிருந்து அழியாப் பேரின்பத்துக்கும், பலவீனத்திலிருந்து மிகப்பெரிய வலிமைக்கும் செல்லும் பயணம். இது இறைவன் தமது குழந்தைகளை ஆட்கொள்ள அவர்களுக்கு அளித்துள்ள பெரிய வாய்ப்பாகும்.

வாழ்க்கை தொண்டும், தியாகமும் ஆகும். அன்புதான் வாழ்க்கை. உறவுமுறையே வாழ்க்கை. இது கவிதை. உரைநடையல்ல. இது கலையும் கற்பனையுமாகும். அறிவியலன்று. வாழ்க்கையே வழிபாடாகும்.

நாம் இவ்வுலகின் விரைந்து செல்லும் பயணிகள். நாம் போய்ச் சேரவேண்டிய இடம் இறைவனது மலரடிகளே. நமது வேட்பு அல்லது நோக்கம் நாம் இழந்துவிட்ட, மறந்துவிட்ட வழிவழி உடைமையைப் பெறுவதுதான். வாழ்க்கையின் உன்னதமான, முக்கியமான நோக்கம் இறைவனுடன் நமக்குள்ள ஒருமைப்பாட்டை உணர்ந்து அறிவதேயாகும், தனித்த வாழ்க்கை என்பதற்குப் பொருள் இல்லை. தனித்திருக்கும் ஆன்மா இறைநிலை அல்லது அருள் நிலையைச் சேர்ந்து முழுமை அடையும்போதுதான் வாழ்க்கையின் பொருள் நிறைவு பெறுகிறது.

## வாழ்க்கையின் நோக்கம்

வாழ்க்கையின் உண்மையான இலக்கு நாம் எங்கிருந்து வந்தோமோ அந்த மூலஸ்தானத்துக்குப் போய்ச் சேர்வதே. ஆறுகள், அவை பிறருக்கு அளிக்கும் தண்ணீரைப் பெற்ற பெருங்கடலில் போய்ச் சேர்வதைப்போல, பெருநெருப்பு சீற்றத்தோடு பாய்ந்து எரிந்து தனது மூலத்திலேயே கலந்துவிடுவதுபோல இறைவனது அருளைப் பெற்று அவனுடன் இரண்டறக் கலக்கும்வரை நாம் ஓய்வின்றிச் செயல்பட வேண்டும்.

வாழ்க்கையின் நோக்கம் இறைநிலையடைதல் அல்லது வீடுபேறு அடைதலாகும். தன்னுள்ளே என்றும் நிலைத்திருக்கின்ற இறைத்தன்மையை, தளைகளிலிருந்து விடுபட்டு வெளிவந்து தெளிவாக உணர்தலும், குறிப்பிடத்தக்க தனி மனப்பாங்கை விட்டு இறைவனுடன் இரண்டறக் கலத்தலும் மனித வாழ்க்கையின் நோக்கம். முடிந்துபோகின்ற வாழ்க்கையின் உயர்ந்த நோக்கம் முடிவில்லாப் பெருவாழ்வை அடைவதுதான்.

# பருவுடலிலும், ஆன்மாவிலும் வாழ்க்கை

ஆன்மீக வாழ்க்கையே உண்மையானதும், நிலையானதும் ஆகும். பயம், பாதுகாப்பற்ற நிலை, நோய், அழிவு ஆகியவற்றைக் கொண்ட வேகமும், அவசரமும் நிறைந்த இக்கால வாழ்க்கை உண்மை யான வாழ்க்கை ஆகாது. உடலுக்கு இன்பம்தரும் ஆடம்பரமான, செல்வச் செழிப்பான, அதிகாரம் மிக்க வாழ்க்கை, வாழ்வின் நோக்கமாகாது. அவ் வாழ்க்கை மனத்துக்கும், ஆன்மாவுக்கும் அமைதியளிக்காது.

புலன்களுக்கு ஆட்பட்ட வாழ்க்கை, வாழ்க்கை அன்று. புலன்வழி பெறும் இன்பம் விஷம் கலந்த தேனைப் போன்றது. ஒரணு மதிப்புடைய புலன் இன்பம் பதினைந்தணு மதிப்புடைய துன்பம் கலந்த தாகும். புலன்வழி பெறும் இன்பம் பாவம், நோய், பந்தம், தீய பழக்கங்கள் மற்றும் மன அமைதி யின்மை போன்ற பல்வேறு குறைகளைக் கொண்டது. புலன் இன்பங்களில் ஈடுபடுவது இறைவன்பால் செலுத்தும் பக்தியைக் குலைப்பதோடு இறைவனைத் தேடும் மனத்தின் திறனைப் பலவீனப்படுத்துகிறது. புலன்நுகர் இன்பம் வாழ்வையும், மேன்மை, வலிமை, மனத்திண்மை, நினைவாற்றல், செல்வம், புகழ், புனிதத்தன்மை, பக்தி ஆகியவற்றையும் அழிக்கின்றது. இது மனிதனை நரகமாகிய பெருங் கடலில் தள்ளுகிறது.

இவ்வுலக வாழ்க்கை, கவலைகள், துன்பங்கள் மற்றும் அடிமைத்தனம் நிறைந்தது; குறைகளும், பலவீனங்களும், கட்டுப்பாடுகளும் மிக்கது; வெறுப்பு, பொறாமை, தன்னலம், நம்பிக்கைத் துரோகம், துன்பங்கள், கவலைகள், துக்கங்கள்,

நோய்கள், இறப்பு, கயமை, குறுகிய மனப் பான்மை, புரட்டு, நயவஞ்சகம், போட்டி, அழுக்கு, இருள், சண்டைகள், சச்சரவுகள், வாதங்கள், போர்கள், ஏமாற்றம், மனச்சோர்வு, கொடுமை, சுரண்டல், கலக்கம், அமைதியின்மை ஆகிய வற்றைக் கொண்டது. எல்லாப் பொருள்களும் சிறிதளவு கற்பனையான இன்பமாகிய முலாம் பூசப் பட்டுள்ளன. இது இலேசாகத் தங்க முலாம் பூசியது போன்றது. உண்மையில் வாழ்க்கை பகட்டும், மாயையும் கொண்டது. இனிப்பு மாத்திரைக்குள் கசப்பு இருக்கிறது. தங்கப் பூச்சின் கீழ் பித்தளை தான் இருக்கிறது. இன்பம் என்று அழைக்கப்படுவன வற்றின் கீழ் துன்பமும், துயரமும், வேதனையும் தான் உள்ளன. இவ்வாழ்க்கை அச்சமும், பந்த பாசமும், இன்னல்களும் நிறைந்தது.

இவ்வுலக வாழ்க்கை நிலையற்றது. பொய்ம்மை யானது. சிறிது நேரத்தில் மறையக் கூடியது. அற்பமானது. மதிப்பற்றது. இதன் முடிவு கல்லறையே. இங்கு நீண்ட பேச்சும், வீண் வம்பளப்பும், உண்ணலும், உறங்கலும் தவிர வேறெதுவும் இல்லை. எல்லாம் பொய்ம்மையும், துயரமும், அழிவும், விரைந்து மறையும் தன்மையும்தான். இங்கே பெறும் அனுபவத்துக்கு மதிப்பும், உண்மையும் இல்லை. கடவுள் ஒருவரே உண்மையானவர்.

பூஜ்ஜியங்கள் எத்தனை இருப்பினும் அவற்றின் முன் '1' என்ற எண்ணைச் சேர்க்காவிடில் அவற்றுக்கு மதிப்பில்லை. அதுபோன்று நீங்கள் ஆன்மீக வாழ்க்கையை மேற்கொள்ளாவிட்டால், உங்களிடம் ஆன்மீக வளம் இல்லையானால், உங்களிடம் ஆன்ம ஞானம் இல்லையென்றால், உங்களிடம் உலகத்துச் செல்வங்கள் எல்லாம்

இருப்பினும் பயன் ஏதும் இல்லை. இறையருளுக்குப் பாத்திரமாகும் வகையில் நீங்கள் வாழ வேண்டும். வாழ்க்கையில் உயிரின் உள்ளொளியைச் சேர்க்க வேண்டும். இதனால்தான் ஏசுபிரான் ''முதலில் நீங்கள் இறைவனது பேரரசையும், நேர்மையையும் நாடவேண்டும். அப்போது எல்லா இன்பங்களும் தாமே வந்து சேரும்'' என்றார். வீடு பேறுடைய வாழ்க்கையே முழுமையானது. அது வளம் மிக்க அகச்சார்புடைய ஆன்மீக வாழ்க்கையாகும். இது கவலையும், துன்பமும் அற்றது; முழுமையானது; நிறைவானது; சுதந்திரமானது; அறிவும், நிலைத்த பேரின்பமும் நிறைந்தது; எங்கும் பரந்திருப்பது; மாற்றமில்லாதது. இங்கே 'துஷ்டியும், புஷ்டியும்' நிறைந்திருக்கும்.

ஆன்மீக வாழ்க்கையை ஏற்றால் நீங்கள் தூய்மை பெறலாம். பிறவி விடுதலை பெறலாம். மிகவும் விரும்பக்கூடிய பற்றினை உண்மையின் பலிபீடத்தில் தியாகம் செய்வதே வாழ்க்கையின் சிறந்த அழகாகும். உண்மையை மேற்கொண்டு நடப்பதும், எல்லாத் தடைகளையும் துணிவுடன் கடந்து செல்வதும்தான் வாழ்க்கை. வாழ்க்கையின் மிகப் பெரிய மகிழ்ச்சி இறைவனிடத்து ஈடுபாடு கொள்ளலும், மனத்தில் இறைவனைத் தியானிப்பதுமே. ஆன்மீக வாழ்க்கை மனித வாழ்க்கைக்குப் பொருள் தருகிறது, புகழ் அளிக்கிறது.

## வாழ்க்கைப் போராட்டம்

ஒரு குறிக்கோளுக்காகப் போராடுவதே வாழ்க்கை. இது நிறைவும், முழுமையும் பெறுவதற்கான சண்டை. பிறவியிலிருந்து விடுதலை பெறும் மேலான சுதந்திரத்தை அடைவதற்கான போர். வாழ்க்கை போராட்டமும் எதிர்த்து

நிற்றலுமானது. இது வெற்றிகளின் அணிவகுப்பு. மனிதன் போராட்டத்தில் தோன்றி, வளர்ந்து, மேலும் வளர்ச்சி பெற்றுப் பல அனுபவங்களைப் பெறுகிறான். போராட்டமில்லாமல் வாழ்க்கையும், சமூகமும் இல்லை. நீங்கள் தொடர்ந்து வாழ்வதற்குப் போராட்டம் தவிர்க்க முடியாதது. போராட்டத்தைத் தவிர்க்கும் அந்தக் கணத்திலேயே உங்கள் வாழ்வு முடிந்துவிடும்.

இதயமாகிய போர்க்களத்தில் ஆன்மீகத்தின் பகைவர்களுடன் துணிவுடன் போரிடுங்கள். மனத்தோடும், புலன்களோடும் நடக்கும் உட்சண்டையில் சிறிதளவு வெற்றி கிடைத்தாலும் அது உங்களது மனத்திண்மையை வளர்ப்பதுடன் பெருநம்பிக்கையையும், துணிவையும் தருகின்றது. போராட்டம் தீவிரமடைய அடைய வெற்றி மேலும் மேலும் புகழ் பெறுகிறது. இறைவனை உணர்வதற்கு மிகப்பெரும் போராட்டம் தேவைப்படுகிறது.

இறைவனுக்காக வாழுங்கள். இச்சிறிய உலக வாழ்க்கையின் கஷ்டங்களையும், பந்தபாசங்களையும் தைரியமாக எதிர்த்து போராடுங்கள். மனிதராக வாழுங்கள். மிகப் பெரிய லட்சியத்தை அடைய தைரியமாகப் போராடுங்கள். மலை ஏறுதல், கால்வாயைக் கடத்தல், ஒரு நகரத்தின் மேல் குண்டு வீசுதல் அல்லது ஒரு கோட்டையைத் தகர்த்தல் போன்றவை உண்மையான வீரச் செயல்களோ, துணிவோ ஆகமாட்டா. தன் மனக் கட்டுப்பாட்டினால் மனத்தையும், புலன்களையும் அடக்கி, கோபம், பற்று, அகங்காரம் ஆகியவற்றை வெற்றி கொள்ளுவதே மனிதனின் உண்மையான வீரமாகும். எவ்வளவு காலம் பற்றுக்களுக்கும், புலன்களுக்கும் அடிமையாக இருக்கப் போகிறீர்கள்?

உங்களிடம் உள்ள உண்மையான தெய்வீகத் தன்மையை, நிலைநாட்டப் பாடுபடுங்கள். இது உங்களது முக்கியமான கடமையாகும்.

## வாழ்க்கை ஒரு கல்விக்கூடம்

உடலாகிய இச் சரீரத்தைப் புறக்கணிக்க வேண்டுமென்பது இதன் பொருளல்ல. இறைவன் தமது லீலைகளை எடுத்துக்காட்டும் விளக்கமாக இவ்வுடல் இருக்கிறது. உடலும், ஆன்மாவும் வெப்பமும், நெருப்பும் போலவும்; குளிர்ச்சியும் பனிக்கட்டியும் போலவும், பூவும் மணமும் போலவும் பிரிக்க முடியாதவை. பிரம்மமும், மாயையும் பிரிக்க முடியாதவை. ஒன்றாக இருப்பவை. இவ்வுடல் மேற் கொண்டுள்ள வாழ்க்கை பிரம்மத்தின் அழிவில்லா வாழ்க்கைக் கான நிச்சயமான ஒரு முன்னேற்பாடு. பல பயன் தரக்கூடிய பாடங்களைக் கற்பதற்கும், தெய்வீகப் பண்புகளையும், நல்லியல்புகளையும் வளர்த்துக் கொள்வதற்குமான பள்ளிக்கூடமாக வாழ்க்கை இருக்கிறது. இந்த வாழ்க்கையாகிய பள்ளியில் ஒவ்வொரு கவலையும், ஒவ்வொரு துன்பமும், ஒவ்வொரு துயரமும் ஓர் அரிய பாடத்தைத் தருகின்றன. இவ்வுலக வாழ்க்கை சுயநலம் பெறு வதற்கான கருவியாகும்.

உலகம்தான் உங்களுக்குச் சிறந்த ஆசிரியர், சிறந்த குரு. ஒவ்வொரு பொருளிலும் ஒரு பாடம் இருக்கிறது. ஒவ்வொரு அனுபவத்திலும் ஒரு பாடம் இருக்கிறது. உலகமானது இரக்கம், மன்னிக்கும் தன்மை, சகிப்புத் தன்மை, உலக சகோதரத்துவம், திறமை, உயர் பண்பு, பெருந்தன்மை, பொறுமை, மனவுறுதி போன்ற பல்வேறு தெய்வீக நல்லியல்புகளை வளர்க்கும்

சிறந்த பயிற்சி பல்கலைக்கழகமாகும். இவ்வுலகம் கொடிய மனப்பான்மையை எதிர்த்துப் போரிடவும், உள்ளிருக்கும் இறைப் பண்புகளை வெளிப்படுத்தவுமான ஓரிடமாகும். கீதை, யோக வாசிஷ்டம் ஆகியவற்றின் மையக் கருத்து, மனிதன் தன் வாழ்நாளில் தன்னைத்தான் அறிதல் என்பதே. இவ்வுலகில் வாழுங்கள். ஆனால் உலகின் வெளியே வாழுங்கள். தாமரை இலைத் தண்ணீர் போல நடந்து கொள்ளுங்கள். சுயநலம், காமம், கோபம், பேராசை, வெறுப்பு, பொறாமை ஆகிய கீழான அசுர குணங்களை விட்டு விடுங்கள். தெய்வீக இயல்பை உறுதிப்படுத்திக் கொள்ளுங்கள். மனத்துறவும், தன்னலமற்ற வாழ்க்கையையும் மேற்கொள்ளுங்கள்.

## வாழ்க்கை வெற்றிக்கும், இறைவனை உணர்தலுக்கும் நிச்சயமான வழிகள்

எளிமையான, பகட்டில்லாத வாழ்க்கையை நடத்துங்கள். உண்பதற்காக வாழாமல், வாழ்வதற்காக உண்ணுங்கள். பொறாமை கொள்ளாதீர்கள். அவதூறு சொல்லாதீர்கள். பொய் பேசாதீர்கள். ஏமாற்றாதீர்கள். வன்மத்துக்கு இடங்கொடாதீர்கள். இப்படி இருந்தால் எப்போதும் உற்சாகமாக, மகிழ்ச்சியாக, அமைதியாக வாழ்வீர்கள்.

நேர்மையே வாழ்க்கையின் சட்டம். ஒழுக்கமான வாழ்க்கை வாழுங்கள். தர்மத்தைக் கண்டிப்பாகக் கடைப்பிடியுங்கள். நல்லொழுக்கம் இல்லாத வாழ்க்கை மனித வாழ்க்கையாகாது.

தன்னலமற்ற சேவைதான் வாழ்க்கையின் சாரம். உலக அன்பே வாழ்க்கையின் உணவு.

மனித இனம் முழுவதையும் நேசித்துத் தொண்டு செய்யா விட்டால் நீங்கள் நிறைவாழ்வு வாழ்ந்த வராகவும், வாழ்க்கையை முழுதும் உணர்ந்த வராகவும் ஆக மாட்டீர்கள். இறைவனிடம் பக்தி செலுத்துவதும், மனித இனத்துக்குத் தொண்டு செய்வதுமே உண்மையான வாழ்க்கையின் இரகசியமாகும். பிறருக்கு உதவுவதற்காக வாழுங்கள். அப்போது கடவுளின் அருட் சக்தி உங்களுக்குள் பாய்ந்து ஓடி வரும்.

அருட் தொண்டர்களின் வாழ்க்கை வரலாறுகளைப் படித்து அவற்றிலிருந்து உணர்வு பெறுங்கள். இரக்க மனம், உதவும் கரம், இனிய பேச்சு, தொண்டு வாழ்க்கை, சமநோக்கு, நடுநிலை மனப் பாங்கு ஆகியவற்றை வளர்த்துக் கொள்ளுங்கள். உங்கள் வாழ்க்கை புனிதமடையும்.

பிறருக்குச் சேவை செய்யுங்கள். அனைவரையும் நேசியுங்கள். பிறருக்குத் தருமம் செய்யுங்கள். உங்கள் மனத்தையும், உடலையும் தூய்மையாய் வைத்திருங்கள். தியானம் செய்யுங்கள். உங்கள் பயணத்தில் எல்லையில்லாப் பேரின்பப் பேரரசைச் சென்றடைவீர்கள். பிரகாசிக்கின்ற புதையல்களைக் காண்பீர்கள். இறைவனை இவ்வாழ்விலேயே கண்டு கொள்வீர்கள். வலிமை பெறுவீர்கள். உடல் நலம் பெறுவீர்கள். விடுதலை பெறுவீர்கள். அன்பாகவும், மகிழ்ச்சி யாகவும், அமைதியாகவும் இருப்பீர்கள். மற்ற வர்களை ஈர்ப்பீர்கள். உங்களது அன்புக்குரிய வர்களின் வாழ்க்கை சிறக்கும்படி வாழ்த்துவீர்கள்.

வாழ்க்கையை நிரந்தரமான இன்பம் உடைய தாகச் செய்யுங்கள். சத்தியம், தபசு, தயை, தானம் ஆகியவற்றில் மகிழ்ச்சி கொள்ளுங்கள்.

எளிமையாகவும், முறையாகவும் வாழுங்கள். கடினமான வாழ்க்கையை மேற்கொள்ளுங்கள். ஒவ்வொரு நாளையும் இதுதான் கடைசி நாள் எனக் கருதி ஒவ்வொரு நொடியையும் பிரார்த்தனையிலும், தியானத்திலும், சேவையிலும் பயன்படுத்துங்கள். தொடர்ந்து கடவுளுக்காகத் தியாகம் செய்வதாக உங்கள் வாழ்க்கை அமையட்டும்.

நிகழ்காலத்தில் வாழுங்கள். கடந்த காலத்தை மறந்து விடுங்கள். எதிர்காலத்துக்கான நம்பிக்கையை விட்டு விடுங்கள்.

வாழ்க்கையின் பொருளை நன்றாக உணர்ந்து கொண்டு பிறகு விசாரணையைத் தொடங்குங்கள். இவ்வாழ்க்கை உங்களுக்குக் கிடைத்த மிகப் பெரிய நன்கொடை. ஒவ்வொரு நொடியையும் பயனுடையதாகக் கழியுங்கள். துணிந்து செயல் படுகிறவர்களுக்கே வெற்றி கிட்டுகிறது. அச்சம் கொள்வோரிடம் அது சென்றடைவதில்லை.

## வாழ்க்கையின் ஒருமைப்பாடு

வாழ்க்கையை ஒரு தொகுதியாக முழுமையாகப் பாருங்கள். பரந்த எண்ணங்களுடன் நோக்குங்கள். எல்லா வாழ்க்கையும் ஒன்றே. எல்லா வாழ்க்கையும் ஒன்றாகவும், உண்மையாகவும் இருக்கின்ற பிரம்மம் அல்லது தனி முழு முதற் பொருளிலிருந்துதான் தொடங்குகின்றது. இறைவனே எல்லா உயிர்களிலும் மூச்சாக இருக்கின்றார். எல்லாம் ஒன்றே. உலகம் ஒரு குடும்பம். எல்லோரும் ஒரே மனிதக் குடும்பத்தின் உறுப்பினர்களே. எல்லாப் படைப்பும் ஓரமைப்பியல் சார்ந்த தொகுதியே. இந்தத் தொகுதியில் எந்த மனிதனும் சுதந்திரமாக இல்லை.

மனிதன் மற்றவர்களிடமிருந்து பிரிந்து செல்வதால் தனக்குத்தானே துயர்களைச் சேர்த்துக் கொண்டிருக்கிறான். தனித்திருப்பது இறப்புக்குச் சமமாகும். ஒருமையே நிலையான வாழ்க்கை. உலகு சார்ந்த அன்பை வளர்த்துக் கொள்ளுங்கள். எல்லோரையும் இணைத்துக் கொள்ளுங்கள். எல்லோரையும் வரவேற்றுக் கொள்ளுங்கள். பிறரிடமுள்ள நல்லதை ஏற்றுக் கொள்ளுங்கள். எல்லாத் தடைகளையும் அகற்றுங்கள். . எல்லா உயிர்களிடத்தும் உள்ள அழிவற்ற சாரமான ஒருமைப்பாட்டை அங்கீகரியுங்கள். விலங்குகளுக்குப் பாதுகாப்புத் தாருங்கள். எல்லா உயிர்களும் புனிதமாகட்டும். அப்போது இவ்வுலகம் அழகின் சொர்க்கமாகவும், அமைதி, சாந்தி ஆகியவற்றின் பெரு வெளியாகவும் அமையும்.

மலரோடும், பசும்புல்லோடும் சேர்ந்து புன்னகை புரியுங்கள். வண்ணத்துப் பூச்சிகள், பறவைகள், மான்கள் ஆகியவற்றோடு விளையாடுங்கள். புதர்களுடனும், படரும் கொடிகளுடனும், மரம் செடிகளுடனும் கை குலுக்குங்கள். வானவில்லுடனும், காற்றுடனும், விண் மீன்களுடனும், சூரியனுடனும் பேசுங்கள். அண்டை அயலார், நாய்கள், பூனைகள், பசுக்கள், பிற மனிதர்கள், மரங்கள், மலர்களுடன் நட்பை வளர்த்துக் கொள்ளுங்கள். அப்போது உங்களுக்குப் பரந்த, முழுமையான, வளமான, நிறைவான வாழ்வு அமையும். வாழ்க்கையின் தனித் தன்மையை அல்லது ஒருமைப்பாட்டை உணர்வீர்கள். சொற்களால் இதனை விளக்க இயலாது. நீங்களாகவே உணர வேண்டும்.

# அமைதி

அமைதி என்பது மிக உயர்ந்த ஒரு பண்பாடு. இது ஆன்மாவின் ஒரு குணம். பேராசை உடையவர்களிடம் அமைதியிராது. தூய்மையான உள்ளத்தில் நிறைந்திருக்கும். இது காமுகர்களைப் புறக்கணிக்கிறது. சுயநலக்காரரிடமிருந்து தூர விலகிச் சென்று விடுகிறது. பேரறிஞர்களின் அணியாகத் திகழ்கிறது.

இது ஒரு மோன நிலை. குழப்பம், கவலை, போராட்டம், புரட்சி, வன்மை ஆகியவற்றிலிருந்து பெறும் விடுதலை. இணக்கமானதும், ஓசையற்றதும், அசையாததும், நம்பிக்கை உடையதும், ஒய்வானதுமாக இருக்கிறது. இது போரற்ற அல்லது போரைத் தவிர்க்கின்ற ஒரு நிலை.

அமைதி மனிதனின் மகிழ்ச்சியான மற்றும் இயல்பான நிலை. அமைதி அவனுடைய பிறப்புரிமை. போர் அழிவைத் தருகிறது.

ஒவ்வொருவரும் அமைதியை விரும்புகிறார்கள். அமைதியைத் தேடி அலைகிறார்கள். ஆனால் அமைதி அவ்வளவு எளிதாகக் கிடைத்துவிடாது. அப்படிக் கிடைத்தாலும் நெடுநாள் தங்காது.

# அமைதியின் இருப்பிடம்

புலனடக்கமில்லா மனிதனின் உள்ளத்தில் அமைதி இராது. அமைச்சர்கள், வழக்குரைஞர்கள், வணிகர்கள், சர்வாதிகாரிகள், மன்னர்கள் மற்றும் மாமன்னர்களின் உள்ளத்தில் அமைதி இராது. யோகியர், சாதுக்கள், சந்நியாசிகள், ஆன்மீக வாதிகள் ஆகியோர் உள்ளத்தில் அமைதி நிலவும். புலன்களையும், மனத்தையும், அடக்கிப் பற்றைத் துறந்தவர்களிடம் அமைதி இருக்கிறது. பேராசை, காமம், பொறாமை, பகை, கோபம், செருக்கு, அகங்காரம் ஆகியவை அமைதியின் பகைவர்கள். உணர்ச்சிவயப்படாமை, கூர்மையான அறிவு, பற்றின்மை ஆகிய வாளைக் கொண்டு இப் பகைவர்களை வீழ்த்துங்கள். நிலையான அமைதி பெறுவீர்கள்.

அமைதி என்பது செல்வமோ, தோட்டமோ, பங்களாவோ, சொத்தோ, ஆகாது. புறப்பொருள் களில் அமைதியைக் காணமுடியாது. ஆன்மாவில் தான் அது குடியிருக்கிறது.

பணம் அமைதியைத் தராது. அதைக் கொண்டு உங்களால் பல பொருள்களை வாங்க முடியும். ஆனால் அமைதியை வாங்க முடியாது. மிருதுவான படுக்கைகளை வாங்கலாம். உறக்கத்தை வாங்க முடியாது. நல்ல உணவுப் பொருள்களை வாங்க முடியும். பசியை வாங்க முடியாது. ஊட்ட மருந்தை வாங்கலாம். நல்ல உடல் நலத்தை வாங்க முடியாது. நல்ல நூல்களை வாங்கலாம். நல்ல அறிவை வாங்க முடியாது.

புறப்பொருள்களிலிருந்து வெளியேறுங்கள். தியானியுங்கள். மனத்துக்கு ஓய்வளியுங்கள்.

அப்போது என்றும் நிலைத்திருக்கும் அமைதியைப் பெறுவீர்கள்.

உங்களுக்கு உங்களைத்தவிர அமைதியைத் தருபவர்கள் வேறு யாரும் இல்லை. கீழான பண்புகளையும், புலன்களையும், மனத்தையும், விருப்பங்களையும், அடக்கமுடியாத ஆசைகளையும் வெற்றிகண்டாலே அமைதி கிடைக்கும். வேறெதுவும் அமைதி தராது. உங்களுக்குள்ளேயே அமைதி இல்லையென்றால், புறப்பொருள்களிலும், புறவழிகளிலும் அமைதியைத் தேடுவது வீணேயாகும்.

## உள்ளமைதி

முழுமையான பாதுகாப்பையும், நிறைந்த அமைதியையும் இவ்வுலகில் பெறமுடியாது. ஏனென்றால் இது உறவு வழிப்பட்ட உலகம். எல்லாப் பொருள்களும் காலம், இடம், காரண காரியத் தொடர்பு ஆகியவற்றால் கட்டுப்படுத்தப் பட்டுள்ளன. இவை அழியக் கூடியவை. பிறகு நீங்கள் எப்படி முழுப்பாதுகாப்பும், நிறைந்த அமைதியும் எதிர்பார்க்க முடியும்? அழியாத பரம்பொருளிடம்தான் இவற்றை நீங்கள் காண முடியும். அவர் அமைதியின் பேருருவாகத் திகழ்கிறார். அவர் காலம், இடம், காரணகாரியங் களுக்கு அப்பாற்பட்டவர்.

உண்மையான, ஆழ்ந்த அமைதி புறக்கட்டுப் பாடுகளுக்கு அப்பாற்பட்டது. உண்மையான, நிலையான அமைதி உள்ளிருக்கும் அழிவற்ற இறைவனின் அமைதியாகும். இவ்வமைதிப் பெருங்கடலில் நீங்கள் ஓய்வெடுத்துக் கொண்டால்

உலகின் அன்றாட ஓசைகள் உங்களைப் பாதிக்க மாட்டா. உங்களுள் கிளர்ந்தெழும் உங்களது மனத்தை அடக்கி, எண்ணங்களைக் கட்டுப்படுத்தி, புலன்களை வென்று நிலைத்த அமைதியில் புகுந்து விட்டீர்களானால், தொல்லைதரும் ஓசைகள் மறைந்து போய்விடும். உந்துவண்டிகள் தெருவில் ஊர்ந்து செல்லலாம். பையன்கள் உரத்தகுரலில் ஓசை எழுப்பலாம். வீட்டுக்குமுன் புகைவண்டிகள் ஓடலாம். பல ஆலைகள் உங்கள் வீட்டினருகில் ஓடிக்கொண்டிருக்கலாம். இவற்றின் ஓசைகள் துளிகூட உங்களைப் பாதிக்காது.

## வளர்ச்சிக்கு அமைதி ஆதாரம்

உலகத்தில் அமைதி மிகவும் விரும்பக்கூடிய சொத்தாகும். அகில உலகிலும் இதுவே மிகப் பெரிய புதையல். எல்லா வளர்ச்சிக்கும், முன்னேற்றத்துக்கும் அமைதி மிக முக்கியமானதும், அவசியமானதும் ஆகும். மண்ணுக்கடியிலிருந்து விதை முளைத்தெழும் இரவின் நிசப்தத்தில் அமைதி இருக்கிறது. சந்தடியற்ற அமைதியான நேரத்தில் அரும்பு மலர்கிறது. இது போன்ற அன்பும், அமைதியும் சூழ்ந்திருக்கும் நிலையில் மக்கள் தங்களது தனிப்பட்ட பண்பாட்டிலும், உயர்ந்த நாகரிகத்திலும் முன்னேற்றம் பெறுகிறார்கள். அமைதியில்தான் ஆன்மீகமும் வளர்ச்சி அடைகிறது.

## அரசியல், சமுதாயச் சீர்திருத்தங்களின் விளைவு

இக்காலத்தில் காணப்படும் அமைதி, அச்சத்தினுலும், கட்டாயத்தினுலும் ஏற்பட்டது. பேரறிவாளர்களின் அறிவுரைகளைப் புறக்கணித்து விட்டு உலகின் பெரிய நாடுகள் தங்களது அழிவுச் சக்திகளைப் பயன்படுத்த முனைப்புடன் ஈடுபட்டுள்ளன. இதனுல் போர் ஏற்படுமே தவிர சமாதானம் ஏற்படாது.

அரசியலின் எந்தக் கோட்பாடும் பிரச்சனையைத் தீர்த்துச் சமாதானத்தைக் கொண்டு வரமுடியாது. எல்லாக் கோட்பாடுகளும் தன்னலமும், தன்முனைப்பும் உடைய அழிக்க அழிக்க வளரும் இயல்புடைய அரக்கனின் வெவ்வேறுன முகமூடிகளே. ஏகாதிபத்திய மன்னர்கள் ஆட்சிக் காலத்தில் மக்களாட்சியே அமைதியையும், செல்வத்தையும், செழிப்பையும் ஏராளமாய்த் தரும் என்று மக்கள் கருதினுர்கள். மன்னர்களைப் பதவியிலிருந்து இறக்கினுர்கள். மக்களாட்சியும் சமாதானத்தின் பயனை அளிக்கத் தவறி விட்டது. சிலர் சர்வாதிகாரம், சமதர்மம், பொதுவுடைமை என்று பல கோட்பாடுகளை முயன்று பார்த்தனர். ஒவ்வொருவரும் தமது தீர்வுதான் மிகவும் சிறந்ததென நம்பினர். ஒவ்வொரு புதிய கோட்பாடும் மேலும் மேலும் பிரச்சனைகளையும், சச்சரவுகளையும்தான் தோற்றுவித்தது.

தங்களிடையே அமைதியற்றிருக்கின்ற பலர் உலக சமாதான வளர்ச்சிக்காகச் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றனர். அவர்களது உரத்த பிரச்சாரம், பெரும் பேச்சு, சொற்பொழிவுகள் எல்லாம் மேலும் குழப்பத்தையும், மோதலையும், பிணக்கையும் ஏற்படுத்தியுள்ளன.

உலகெங்கிலும் உலக சமாதானத்தையும், உலக சகோதரத்துவத்தையும், உலக சமயத்தையும் கொண்டுவரப் பெரும் மாநாடுகள் நடத்தப்படு கின்றன. மனிதனின் வெற்று ஆரவாரம்தான் அவனிடம் சீர்திருத்தமில்லாவிடினும், சமுதாயத் தைத் திருத்தத் தூண்டுதல் செய்கிறது. ஆரவாரம் தான் உலகை ஆளுகிறது. இரண்டு வேலையற்ற வர்கள் சந்திக்கும்போது முரண்பாடும், சச்சரவும் தோன்றுகின்றன.

இதைப்போலத்தான் சமுதாய சீர்திருத்தமும். மக்களுக்கு நாகரிகம் கற்றுத்தரும் முயற்சியில் சில விஷயம் தெரிந்தவர்கள் அவர்களாகவே தலைவர் களாகி மக்களுடைய பழக்கவழக்கங்களில் தலையிடத் தொடங்கினார்கள். மக்கள் தம் பழைய நிலைகளை இழந்தனர். சீர்திருத்தவாதிகளால் அவர்களுக்குப் புதிய, நிலையான சீர்திருத்தங்களைத் தரமுடிய வில்லை. அவர்கள் குழப்ப நிலைக்கு இட்டுச்செல்லப் பட்டனர். குருடன் இன்னொரு குருடனை எவ்வாறு அழைத்துச் செல்ல முடியும்? இறைவனைப் பற்றிய மேலான அறிவை முதலில் நீங்கள் பெற வேண்டும். அப்போதுதான் மற்றவர்களைச் சரியான பாதையில் கொண்டு செல்ல முடியும்.

உங்களை உயர்த்திக் கொண்டால்தான் மற்றவர்களை உயர்த்த முடியும். தங்களைத் தாங்களே காப்பாற்றிக் கொள்பவர்களால்தான் உலகைக் காப்பாற்ற முடியும். ஒரு கைதியால் மற்ற கைதிகளை விடுவிக்க முடியாது. இரவும், பகலும் தம் கொள்கைகளைப் பரப்பி வாதாடிக்கொண் டிருக்கும் ஓராயிரம் சமயவாதிகளைக் காட்டிலும் தன்னைத்தானுணர்ந்த ஒரு அடியவரால் சமாதான முன்னேற்றத்துக்கு அதிகமாகச் செய்யமுடியும்.

அரசியலின் அடிப்படை, சமூக அறிவில் இருக்கிறது. தனிமனித வளர்ச்சியில் சமூக அறிவின் அடிப்படை இருக்கிறது. ஒவ்வொரு தனி மனிதனும் பின்பற்றும் தத்துவத்தாலும், சமயத்தாலும் மனித வளர்ச்சி ஆளப்படுகிறது. கீழை நாடுகளின் தத்துவம் மனிதனை ஓர் ஒட்டுமொத்தமான தொகுதியாய்க் கருதுகிறது. மனிதன் தன்னைத் தானே முழுமையானவனாகச் செய்து கொள்ள வேண்டுமென்கிறது.

## தனி மனித சீர்த்திருத்தமும் சமூக சீர்த்திருத்தமும்

முதலில் உங்களைச் சீர்திருத்திக் கொள்ளுங்கள். சமுதாயம் தானாகச் சீர்திருத்தம் பெறும். மனத்திலிருந்து ஆசையை வெளியேற்றுங்கள். உலகம் தன்னைத்தானே கவனித்துக்கொள்ளும். மனத்திலிருந்து உலகம்பற்றிய விசாரங்களை அகற்றுங்கள். உலகம் அமைதி பெறும். இதுதான் ஒரே வழி. இது சோர்வு வாதமல்ல. புகழ்மிக்க நம்பிக்கை வாதம். தட்டிக்கழிப்பதல்ல. நிலைமையை எதிர்கொள்ள இதுவே வழி. ஒவ்வொருவரும் தம் உய்வுக்காக முயற்சித்தால் பிரச்சனைகளை உருவாக்க யாரும் இருக்க மாட்டார்கள். ஒவ்வொருவரும் ஊக்கத்துடன் சமயநெறிகளைப் பின்பற்றவும், சாதனைகளைச் செய்யவும், இறைவனை உணரவும் உழைத்தால் அவர்களிடம் பற்று இராது. சச்சரவுகளை உண்டாக்க நேரமும் இருக்காது. புவியில் தானாக அமைதி ஏற்படும்.

## மதத்தின் கடமை

கிறித்துவத்தை தழுவினுல்தான் அமைதி உண்டாகும் என்று கிறித்துவர் நினைக்கிறுர். அனைவரும் இஸ்லாமிய சமயத்தைப் பின்பற்றினுல் தான் அமைதி நிலவும் என்கிறுர் முஸ்லீம் நண்பர். இது தவறுன எண்ணமாகும். உலக மக்கள் எதற்காகச் சண்டையிட வேண்டும்? சைவர்களும், வைணவர்களும் எதற்காகச் சச்சரவிட்டுக் கொள்ள வேண்டும்? சகோதரர்கள் ஏன் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொள்கிறுர்கள்? அவர்களது மனம் மாற வேண்டும். பேராசையும், தன்னலமும் அழிய வேண்டும். அப்போதுதான் உலகில் அமைதி நிலவும்.

சமயத்தைப்பற்றி மக்கள் ஏதேதோ பேசி வருகிறுர்கள். அதன் கொள்கைகளைப் பின்பற்ற வோ, அவற்றின்படி வாழவோ அவர்களுக்கு அக்கறையில்லை. கிறித்தவர்கள் ஏசுபிரானின் மலைச் சொற்பொழிவின் வழியும், முஸ்லீம்கள் நபிநாயகம் அவர்களின் கொள்கைப்படியும், இந்துக்கள் இறைவனுடையவும், சந்நியாசிகள் மற்றும் சாதுக்களின் அறிவுரைகளின்படியும் நடந்து கொண்டால் எங்கும் அமைதி நிலவும்.

அமைதி ஆக்கபூர்வமாகவும், நிலைத்தும் இருக்க வேண்டுமாயின் அது இறைவனிடமிருந்து பெறப்பட வேண்டும். இறைவனில்லாமல் அமைதியில்லை. இறைவன்தான் அமைதி. அமைதியில் அல்லது இறைவனில் மூழ்கிவிடுங்கள். இப்போது நீங்கள் அமைதியைப் பரப்பத் தகுதி பெற்றவர்களாவீர்கள்.






## சமரஸப் பிரார்த்தனை

ஓம் கருணையும் அன்பும் நிறைந்த இறைவா!
உனைத் தொழுது வணங்குகின்றோம்;
நீ எங்கும் உள்ளாய், எல்லாம்
வல்லாய், எல்லாம் அறிவாய்;
நீ ஸச்சிதானந்தப் பொருள் —
மெய்ப் பொருளும், மெய்யறிவும்,
பேரின்பமும் நீயே;
எல்லா உயிர்களிலும் உறைபவன் நீயே.

ஓம் தயாபரத் தெய்வமே!

உணரும் உள்ளமும், சமநோக்கும், தூய அன்பும்
மெய்யறிவும், எமக்குத் தந்தருள்க;
மயக்கத்தை எதிர்க்கவும், மனதை வெல்லவும்,
உள்ளத்தில் ஒளிரும்
தெய்வீகத் தன்மையை எமக்குத் தந்தருள்க;
ஆணவம், துராசை வெறுப்பு, பேராசை, காமம்,
வெகுளி இவை பற்றாது எம்மைக் காத்தருள்க;
ஆன்மீக உணர்ச்சிகளை எமது உள்ளத்தில்
நிரப்பி அருள்க.

ஓம் உலகாளும் ஜெகதீசா!

எல்லாப் பெயரிலும் உருவிலும், உனையே
யாம் காண்போமாக;
எல்லாப் பெயரிலும் உருவிலும், உனையே யாம்
வழிபடுவோமாக;
எப்பொழுதும் உனையே யாம் சிந்தித்து
வருவோமாக;
எப்பொழுதும் உன்னுடைய மகிமைகளையே
பாடுவோமாக;
உன்னுடைய திருநாமம் எப்பொழுதும்
எங்கள் நாவில் இருக்கட்டும்.

" முத்தமிழ்ப்பண்ணை "
வைரி செட்டிப்பாளையம்-621012.
திருச்சி மாவட்டம்.